# இயலிசை

தனி பிரதி விலை ரூபாய் ஒன்று

ஆண்டு சந்தா ரூ. 10/-

அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :

சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :

K. P. இளங்கோவன்

' இயலிசை '

57, தெற்கு சிவன் கோயில் தெரு,

கோடம்பாக்கம், சென்னை - 24

மலர் 2 15 - 12 - 83 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை - இசைவிழா சிறப்பிதழ் இதழ் 14 / 16


## நாதசுர நாயகன்

பாடகன் குரலில் இனிமை இருந்தால் முன்னேற்றம் எளிது அதே போன்று நாதசுரக்காரர் ஓசையில் இனிமை இருந்தாலும் முன்னேற்றம் எளிது இந்த இனிமைக்கு ஊதும் காற்று சுத்தம் இருக்க வேண்டும் என்பார்கள்.



சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த நாமகிரிப் பேட்டை என்ற சிற்றூருக்கு சொந்தமானவர் திரு. K. கிருஷ்ணன். இன்று 54 வயது நிரம்பிய இவர் கடந்த 30 ஆண்டுகளாக தனது இனிய நாதசுர ஒலியால் இசை ஞானத்தால் தமிழகம், இந்தியாவின் இதர மாநிலங்கள், மேலை கீழை நாடுகள் பலவற்றிலும் வலம் வந்து கொண்டிருக்கின்றார். நாதசுரக் கருவியின் பெருமையை வெளிநாடுகளிலும் உணர்த்தியுள்ளார்.

தனது தாத்தா சின்னப்ப முதலியாரிடம் பயின்ற நாதசுரக்கலையால் இன்று இசை உலகில் ஓர் தனி இடத்தை பெற்று இவ்வாண்டு தமிழிசைச் சங்க விழாவில் "இசை பேரறிஞர்" பட்டம் பெறுகின்றார்.

இதுவரை பெற்ற பட்டங்கள் ஏராளம் 1973-ல தமிழக அரசின் 'கலைமாமணி'. 1981-ல இந்திய அரசின் 'பத்மஸ்ரீ' மற்றும் டெல்லி சங்கீத நாடக அகடமி விருது 1974 முதல் திருப்பதி ஆலய ஆஸ்தான கலைஞர் 1977 முதல் தமிழக அரசவைக் கலைஞர் இவ்வாண்டு கனடா நாட்டு டொரண்டோ நகர் பாரதி கலைமன்றத்தால் நாதசுரப் பேரரசர்". பட்டம் கோவில். சபை; வானொலி, TV நிகழ்ச்சிகளுடன் சில திரைப்படங்களிலும் வாசித்துள்ளார்.

## 'சங்கீத சிம்மம்'
## மதுரை சோம சுந்தர கீதம்!

யார் எந்த தொழிலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டாலும் அதில் அயராது உழைத்தால் வெற்றி உறுதி இன்று பண்டிதரும் பாமரரும் வியக்கும் வண்ணம் பாடி பரவசமூட்டும் மதுரையார் டாக்டர் S. சோமசுந்தரம் மேடையில் பாடும் பொழுதே அவர் இசையில் அந்த அளவு ஆற்றலைப் பெற எந்த அளவு உழைத்திருப்பார் என்பது நமக்கு விளங்கும்.

பெரும் நட்டுவனார் பரம்பரையைச்சார்ந்த மதுரை N. சச்சிதானந்தம் பிள்ளைக்கு மகனாக 1919-ல் பிறந்தவர் திரு சோமசுந்தரம் மதுரையிலேயே ஆரம்ப இசை பயின்ற இவருக்கு சங்கீத லய மேதை காஞ்சிபுரம் நயினா பிள்ளை மாணவர் சித்தூர் சுப்ரமணிய பிள்ளையவர்களிடம் 16 வருட குருகுலவாசம் செய்து இசைக்கலையில் சிறக்க வாய்ப்பு கிடைத்தது. அந்த பரம்பரைக்கு ஏற்ற லயஞானமும், திருவருளால் நல்ல சுருதி ஞானமும். பயிற்சி பலத்தால் குரல்வளமும் கிடைக்கப் பெற்றார், பல மணி நேரம் இதர இசைக்கலைஞர்களும் வியக்கும் வண்ணம் பாட ஆரம்பித்தார். இவரது கச்சேரிக்கு என்றும் நிறைய ரசிகர்கள் வந்து ஆரவாரமாக இசையைக் கேட்டு மகிழ்வர். இவரது ராக ஆலாபனை, பல்லவிகளை கேட்கவே தனி ரசிகர்கள் கூட்டம் வரும் சிலர் இவரது பக்தி



ரசமான பாடல்களைக் கேட்டு தன்னை மறந்துவிடுவர் இசை உலகில் ஒரு தனி பாணியை ஏற்படுத்திக் கொண்டார்

இவரது திறனையும் புலமையும் கண்ட தேவர் பிலிம்சு சின்னப்ப தேவர் தனது 'தெய்வம்' என்ற பக்தி படத்தில் இவரை மருதமலையான் மீது பாடவைத்தார். படமும் பாடலும் நல்ல வரவேற்பு பெற்று இவருக்கு பெரும்புகழ் பெற்று தந்தது.

இசை உலகில் 50 வருடம் சேவை செய்துள்ள இவருக்கு கிடைத்த விருதுகள் பட்டங்கள் ஏராளம் அவற்றில் சென்னை தமிழிசைச்சங்க 'இசைப்பேரறிஞர்' தமிழக அரசின் 'கலைமாமணி'. இந்திய அரசின் 'பத்மஸ்ரீ' டெல்லி சங்கீத நாடக அகடமியின் குடியரசு தலைவர் விருது, சேலத்தில் ஈ. வே. ரா. பெரியார் வழங்கிய 'இசைமேதை' வாரியார் சுவாமிகள் வழங்கிய 'திருப்புகழ் மணி' சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக் கழக டாக்டர் பட்டம், திருவிசைநல்லூர் ஸ்ரீதர அய்யர்வாள் உற்சவத்தில் 'சங்கீத சிம்மம்' முதலியவை குறிப்பிடத் தக்கவை. இவ்வாண்டு இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி இசை விழாவிற்கும் தலைமைதாங்கி 'சங்கீத கலாசிகாமணி' விருது பெருகின்றார்.

தற்பொழுது தமிழக அரசவை கலைஞராகவும், திருவாடுதுறை ஆதினக் கலைஞராகவும், அண்ணாமலை பல்கலைக்கழக இசைத்துறை முதல்வராகவும் இருந்து வருகின்றார்.

அனைவரிடமும் இனிமையாகப் பழகுவார். கச்சேரிகளில் துணைக் கருவியாளர்களை தனை இவர் ஊக்குவித்து ஆதரிப்பதே தனி பாணிதான். சீடர்கள் பலர் உண்டு கழுகுமலை ஏ. கந்தசாமி, மதுரை சுவாமிநாதன் பிரபலமடைந்து வரும் சீடர்கள் ஆவர்.

---

இவ்வாண்டு விருதுபெறும் கலைஞர்களுக்கு
' இயலிசை ' யின்
### நல் வாழ்த்துக்கள்!



நேரிசைவெண்பா

மேவு சிதம்பரம் மீனாட்சி
சுந்தரம்
ஒவில் இயலிசை ஓங்குக -
பூவுலகில்
எங்கும் இசைவாணர்
இன்பநலம் எய்தியே
மங்களமாய் வாழ்க மகிழ்ந்து

— திருமுருக கிருபானந்த
வாரியார் சுவாமிகள்,

---

கலைஞர்களே !

ரசிகப்பெருமக்களே !

அனைவருக்கும் வாழ்த்துக்கள் !

தென்னக கலைகளுக்கு கேந்திரமாக விளங்கும் சென்னை மாநகரில் பல்வேறு சபைகளால் இசைவிழா 17-12-83 முதல் 5-1-84 வரை நடத்தப் பெறுகின்றது. பெரும் சபைகள் நிகழ்ச்சிகள் விபரம் இவ்விதழில் தரப்பட்டுள்ளது இடமின்மையால்சில சபைகள நிகழ்ச்சிகள் சேர்க்கப்படவில்லை, நிகழ்ச்சிகளில் 'குழுவினர்' என்று மட்டும்' குறிக்கப்பட்டால் வாய்ப்பாட்டு கச்சேரி என்று கொள்ளவும் இவ்வருடம் விருதுபெறும், கலைஞர்களின் படமும், குறிப்புகளும் கொடுக்கப் பட்டுள்ளன.

இசைக்கலை ஆய்வுக் கூட்டங்கள் தமிழிசைச் சங்கத்தில் 4 நாட்களும், கிருஷ்ணகான சபையில் 1 வாரமும், மியூசிக் அகடமி, இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் தினசரியும் காலை வேளைகளில் நடைபெற உள்ளது.

இசைவிழா விமரிசனம்
அடுத்த இதழில் வெளிவரும்.

— ஆசிரியர்.

# தமிழ் இசைச் சங்கம்

ராஜா அண்ணாமலை மன்றம்

சென்னை-108.



41 - வது ஆண்டு
தமிழிசை விழா

21 - 12 - 83

| | | |
|---|---|---|
| மாலை | 4-00 | சிறுவர்கள் B. M. சுப்ரமணியம் சகோதரர்கள் நாதசுரம் |
| | 5-30 | கல்வி அமைச்சர் மாண்புமிகு C. அரங்கநாயகம் துவக்க நாமகிரிப்பேட்டை திரு. K. கிருஷ்ணன் தலைமை வகிக்கின்றார். |
| இரவு | 6-30 | டாக்டர் சீர்காழி S கோவிந்தராசன் குழுவினர் |
| | 9-30 | திருவிழா R ஜெயசங்கர், B.A. நாதசுரம் மன்னார்குடி M. N. ராசகோபால் பிள்ளை வலையப்பட்டி A. R. சுப்ரமணியம் தவில |

22 - 12 83

| | | |
|---|---|---|
| மாலை | 3-30 | திருத்தணி N. சுவாமிநாதன், T. S. தண்டபாணி தேசிகர் திருப்புகழிசை |
| | 4-30 | சைதை நடராஜன் குழுவினர் தேவாரம் |
| | 6 00 | திருச்சூர் V. இராமச்சந்திரன் குழுவினர் |
| இரவு | 9-30 | K. ஜெயலட்சுமி நடனம் (திருமதி இந்திரா ராஜன் மாணவி). |

23 - 12 - 83

| | | |
|---|---|---|
| மாலை | 3-30 | லால்குடி M. சுவாமிநாதன் குழுவினர் தேவாரம் |
| | 6-00 | திருமதி ஹேமமாலினி பரதநாட்டியம் (தஞ்சை K, P. கிட்டப்பா பிள்ளை நட்டுவாங்கம்) |
| இரவு | 9-30 | குன்னக்குடி R. வைத்யநாதன் பிடில் வலையப்பட்டி A. R. சுப்ரமணியம் தவில் |

24 - 12 - 83

| | | |
|---|---|---|
| மாலை | 3-30 | தருமபுரம் P. சுவாமிநாதன் குழுவினர் தேவாரம் |
| | 6-00 | மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர் |
| இரவு | 9-30 | மதுரை N. கிருஷ்ணன் |

25 - 12 - 83

| | | |
|---|---|---|
| மாலை | 3-30 | M. N. வெங்கடவரதன் நாலாயிரதிவ்யபிரபந்தம் |
| | 4-30 | திருவாசக இசை-மகளிர் |
| | 6-00 | குமாரி B. சுவர்ணமுகி-பரதநாட்டியம் |
| இரவு | 9-30 | ஷேக்சின்னமவுலானா & S. காசிம் நாதசுரம் வலங்கைமான் சண்முகசுந்தரம் தவில் |

26 - 12 - 83

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | கீதா கிருஷ்ணன் குழுவினர் |
| மாலை | 4-00 | திருமதி உஷா ராகவன் பரதநாட்டியம் (அடையாறு K. லட்சுமணன் மாணவி) |
| | 6-00 | லால்குடி G. ஜெயராமன் குழுவினர் வயலின் |
| இரவு | 9-30 | செல்வி ஜெயந்தி ராசகோபால் பரதநாட்டியம் (வழுவூர் R. சாம்ராஜ் மாணவி) |

27 - 12 - 83

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | M. சங்கரன் குழுவினர் |
| மாலை | 4-00 | செல்வி நீலா பாலகிருஷ்ணன் பரதநாட்டியம் (K. S குஞ்சிதபாதம் பிள்ளை நட்டுவாங்கம்) |
| | 6-00 | K. J. ஜேசுதாஸ் குழுவினர் |
| இரவு | 9 30 | K. P. சிவானந்தம் & சாரதா இருவீணை |

28—12—83

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | செல்வி நிருபமா வைத்யநாதன்-பரதநாட்டியம் (சுவாமிமலை K. ராசரத்னம் நட்டுவாங்கம்) |
| மாலை | 4-00 | திருவிடை மருதூர் P.S V ராஜா-நாதசுரம் |
| ,, | 6-00 | டாக்டர் பத்மா சுப்ரமணியம்-பரதநாட்டியம் |
| இரவு | 9-30 | டாக்டர் சேலம் S. ஜெயலட்சுமி |

( 8-ம் பக்கம் பார்க்க )

# ஆடலரசி அபிராமி

முன்னுரையும் முன் கதைச்சுருக்கமும்

இது ஒரு புதுமையான கலைத் தொடர் கதை. கதை கொஞ்சம் தான் இருக்கும் கலை, கலைஞர்கள் சம்பந்தப்பட்ட கருத்துக்கள் அதிகம் இருக்கும். இக்கதை இன்றைக்கு கிட்டத்தட்ட 75 ஆண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தில் குறிப்பாக தஞ்சை மாவட்டத்தில் சில கலைக் குடும்பங்களில் நிகழ்ந்ததாக எழுதப்படும் கதை. இதில் பல உண்மைச் சம்பவங்களும் வரலாம், சம்பவங்களில் சம்பந்தப்பட்ட அனைவரும் இன்று இல்லை என்றாலும் புனைப் பெயர்களை வழங்கப்படும். அவர்களது புகழுக்கும் எவ்வித களங்கம் கற்பிக்கப்படமாட்டாது.



கதை நிகழும் காலத்தில் சினிமா கிடையாது. நாடகமும் கூத்து பாணியாக இருக்கும். அந்தக் காலத்தில் பரதநாட்டியக் கச்சேரிக்கு சின்ன மேளக் கச்சேரி என்றும் நாதசுரக் கச்சேரிக்கு பெரிய மேளக் கச்சேரி என்றும் சொல்வார்கள். ஒலி பெருக்கி வாராததால் வாய்ப்பாட்டு கச்சேரி தற்போது உள்ளது போல் பிரபலமாக இல்லை. சதுர் கச்சேரியில் ''தேவதாசி'' குலப் பெண்களே நடனமாடுவார்கள். பிற பெண்கள் ஆடமாட்டார்கள்.

இன்று திரைப்பட நட்சத்திரங்களுக்கு இருக்கும் பெரும் புகழும் நாதசுர நடனக் கலைஞர்களுக்குத் தான் அன்று உண்டு. மக்களுக்கும் முக்கிய பொழுது போக்கு கலை நிகழ்ச்சிகள் தான். திருமுறை இசை, கதா காலட்சேபங்களும் உண்டு.

பந்தணை நல்லூர் பங்கஜம் என்ற பழைய நடனக்காரியின் ஒரே மகள் அபிராமி. இவள் தனது தாயின் குருநாதரான நட்டுவனார் மேதை குத்தாலம் கணபதி பிள்ளையிடம் பரதம் பயின்று பதினெட்டு வயதில் அரங்கேறினாள். கவர்ச்சியான அழகும் நல்ல கலைத்திறனும் இருந்ததால் அவளது புகழ் தஞ்சை மாவட்டம் முழுவதும் பரவியது. புதுக்கோட்டை இளைய ராஜா ஓர் கலாரசிகர், தஞ்சாவூர் அடுத்த மாரியம்மன் கோவிலுக்கு வந்த போது அபிராமி சதுரினைக் கண்டு அவள் மீது ஆவல் கொண்டு பழக ஆரம்பித்தார். அழகு புகழ் இவற்றுடன் பெரிய இடத்து ஆதரவும் ஏற்பட அவளுக்கு கர்வமும் வளர ஆரம்பித்தது.

குத்தாலம் பாப்பா நடுவயது நடனமாது எனினும் அவளது இளமைத் தோற்றத்தாலும் அனுபவமான சதுர் ஆட்டத்தாலும் ஏராள கச்சேரிகள் செய்து கொண்டு பல பெரிய மனிதர்கள் நட்பு பெற்றிருந்தாள், அபிராமியின் வளர்ச்சி அவளைப் பாதித்தாலும் பாப்பா அதனால் பொருமை கொள்ளாது இருந்தாள். மாருக தனது ஒரே மகனை மகாராசாவுக்கு எப்படியேனும் அவளைத் திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று அந்தரங்க ஆசை வைத்திருந்தாள் தோற்றத்தில் மட்டும் மகாராசா போல் இருந்த அவனே பாப்பாவின் மகன் என்ற தகுதி தவிர வேறு தகுதியில்லாமல் வளர்ந்திருந்தான்.

தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவதர் நல்ல ஞானஸ்தர். அழகாக கதா காலட்சேபம் செய்வார் இவருக்கு தெரியாத கலைஞர்களே கிடையாது. ஆனால் அதிர்ஷ்ட கட்டை வித்தைக்கு ஏற்ற விலாசம் கிடையாது. பங்கஜம், பாப்பா இருவர் குடும்பத்துக்கும் வேண்டியவர். இவரது கும்பகோணம் நண்பர்கள் சுப்புணி, சமையல் வேலை செய்பவர். கோயில் குருக்கள் குலத்து மணி இருவரும் நல்ல ரசிகர்கள்.

மாசி மக விழாவிற்கு சதுராட பாப்பா குழுவினரும், அபிராமி— கணபதி பிள்ளை குழுவினரும் கும்பகோணம் வந்திருந்தனர். அபிராமி குழுவினர் கும்பகோணத்தில் புதுக்கோட்டை ராசாவுக்கு சொந்தமான மாளிகை ஒன்றில் இளையராசா விருந்தினராக தங்கினர். அப்பொழுது இளையராசாவுடன் ஏற்பட்ட ஊடலைத் தீர்க்கும் நோக்குடன் மாளிகைக் கூடத்தில் அபிராமி சிம்ம நந்தன அரங்கேற்றம் செய்தாள், இந்த செய்தி நகரெங்கும் பரவியது. முதல் நாள் ஆடிவிட்டு தங்கியிருந்த பாப்பாவிற்கும் எட்டியது.

மறுநாள் இரண்டு நடனக் குழுக்களும் கும்பகோணம் ரயிலடியில் சந்தித்துக் கொண்டனர். பாப்பாவைப் பற்றி பலவும் அபிராமி கேள்விப்பட்டிருந்ததால் தன்னை வழியனுப்ப வந்த இளையராசா பாப்பாவை சந்திப்பதையே அவள தவிர்க்க விரும்பினாள், ஆனால் பாப்பாவோ எதிர்வந்து அபிராமியை நலம் விசாரித்து அவளது சிம்ம நந்தனம் நாட்டியம்பற்றி புகழ்ந்து பேசினாள்.

இதுதான் இதுவரை வந்த மூலக்கதை. எனினும் இடையில் பல கலைஞர்களின் குட்டிக் கதைகள் வந்துள்ளன. அதனை பழைய இதழ்களில்தான் படிக்கவேண்டும்.

## 11. தோப்பிலே வளரும் நாதம் !

தஞ்சை மாவட்ட முழு அழகினையும் திருவையாறு சுற்றுப்புறத்தில் பார்த்துவிடலாம். அங்கே நீர் வளம். நிலவளம், தெய்வக்களை இத்துடன் கலையம்சமும்கூடி இருக்கும் எனவேதான் தியாக பிரம்மம் அந்த ஞான பூமியை தனது இருப்பிடமாகக் கொண்டார்.

அந்த் திருவையாற்று ஊர் அருகில் ஓர் சிறிய தென்னந் தோப்பு சுற்றிலும் பசுமையான வயல். வழிந்தோடும் வாய்க்கால், அங்கு போய் சிறிது நேரம் அமர்ந்தால் அந்த இயற்கை சூழலிலே-இன்பமான காற்றிலே ஓர் தெய்வீகக்களை இருப்பதனை உணரலாம்.

அதனால்தான் என்னவோ காலையில் எழுந்ததும் கடன்களை முடித்துக்கொண்டு கோவிலுக்கு செல்வதைகூட எண்ணுமல் நேரே இங்கு வந்து விடுவார். திருவையாறு ராஜகோபால் பாகவதர். அவருக்கு ஐம்பது வயது ஆகி இருந்தாலும் வாட்டசாட்டமான, குண்டான உடல். சிவந்த மேனி. தனது நீளமான முடியை காலையில் பிரித்து காயவைத்திருப்பார். பின்னர் குடுமி. நெற்றியில் பெரிய நாமம். இடுப்பில் பஞ்சகச்சம் ஜரிகைக் கரை வேட்டி, மேலே ஜரிகைக் கரை துண்டுதான். வைணவ அந்தணர். அவரைப் பார்த்தால் பெருமாளைப் பார்த்தது போல் இருக்கும். எவரையும் இழுத்து மதிக்கவைக்கும் தோற்றம்.

நடை மிடுக்காக இருக்கும். வார்த்தைகளும் மிடுக்காக வரும். அலட்சியமான போக்கு, நேர்மையை விரும்புவார். தொழிலுக்காக எவரிடமும் பணிந்து செல்வதை விரும்பமாட்டார். சரீரத்திற்கு ஏற்ற சாரீரம், கனமாக இருக்கும். இனிமை குறைவு தான் என்றாலும் சுருதியுடன் சேர்ந்து அந்த குரல் ஒலிக்கும் பொழுது ஏற்படும் நாதம் அனைவரையும் கவரும். அவருக்குதியாகராஜ சுவாமிகள் கீர்த்தனைகள் அத்தனையும் அத்துபடி சுத்தமான பாடாந்திரம், முத்துசுவாமி தீட்சதர், சாமா சாஸ்திரிகள் இன்னும் அநேக வாக்கேயக்காரர்கள் (பாடலாசிரியர்கள்) கீர்த்தனைகளும் நிறைய தெரியும். தெலுங்கு சமஸ்கிருத மொழிகளும் அவருக்கு தெரிந்திருந்ததால் அவற்றின் பொருள் விளங்க பாவத்துடன் பாடுவார்.

ஏராள சிடர்கள், கச்சேரி நிறைய செய்துகொண்டு இருப்பவர்கள்கூட இவரிடம் வந்து புது கீர்த்தனைகளைக் கற்றுக்கொண்டு செல்வார்கள. இசை உலகத்தில் இவருக்கு தனி மதிப்பு இருந்தது. இவரிடம் மற்ற கலைஞர்களுக்கு உள்ளூர பயமும் இருந்தது இவர் வளர்ந்தால் தங்கள் தொழில் பாதிக்கும் என அவர்கள் ''மண்டைக் கர்வம்... பிடிக்கு'' என இவரைப்பற்றி சொல்லி அழுத்தி வைத்திருந்தார்கள். அதைப்பற்றி அவருக்கு கவலையில்லை. திருவையாற்றில் பூர்வீக சொத்தாகவீடும். 5 வேலி நிலமும் இருந்தது. சீடர்கள் ஏராளம், யாரிடமும் ஒன்றும் கேட்கமாட்டார் என்றாலும் அவர்கள் வந்து கொடுப்பதில் குறைவு இராது.

அவர் அமர்ந்திருக்கும் இடத்தைச் சுற்றி இருந்த வயல் அவருடையதுதான். அதில் பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட குடிமக்கள் விவசாயம் செய்து பாகவதருக்கு படியளந்து கொண்டிருந்தார்கள். அவரிடம் தனி பக்தியும் வைத்திருந்தனர். காலையில் அவர் வருவதற்கு முன் அவர் அமரும் இடத்தை சுத்தப்படுத்தி பெரிய பாயை விரித்து சொம்பில் தண்ணீர் எடுத்து வைத்து விடுவார்கள்.

அவர் வந்ததும் பெருமாளைச் சேவிப்பதுபோல்சுற்றிவந்துநின்று வணக்கம் தெரிவித்துவிட்டு நிலதகவல்கள் அல்லது தங்கள் வீட்டு பிரச்சனைகளை சொல்வார்கள். அவரும் அனைத்தையும் பொறுமையாக கேட்டு பதில் சொல்வார். பின்னர் நீண்ட நாட்களாக காணுதவர்களை - உடல் நலம் இல்லாதவர்களை - வெளியூர் சென்றவர்களை குறிப்பிட்டு. 'அவன் எங்கடா ... ... ... கடிதம் போட்டானு ... ... ... ... சௌக்கியமா?' என்று விசாரிப்பார், இந்த தினசரி ஜமாபந்தியிலே அந்த விவசாய பெருங்குடி மக்கள் உச்சி குளிர்ந்துவிடும்.

இதற்குள் இந்த கலைக்கூடத்திற்கு சிடர்கள் வர ஆரம்பித்து விடுவார்கள். சிடர்கள் 15 வயது முதல் 50 வயது வரை இருப்பார்கள். அதில் பெரும்பாலும் கலைஞர்கள் வீட்டு குழந்தைகள் தான் இருக்கும். அதில் ஒருவர்தான் நமது கதாநாயகன் சுவாமிநாதன். தஞ்சாவூர் நாதஸ்வரக்காரர் சுந்தரம் பிள்ளை மூத்த மகன். சுமார் 20 வயது நிரம்பியவன். சிறு வயதிலேயே நல்ல இனிமையான குரல் இருந்ததால் நாதசுரத்தில் விடாது வாய்ப்பாட்டில் இவனுக்கு பயிற்சி கொடுத்திருந்தார் அவர் தந்தையார். தானே இசையில் அடிப்படை ஆரம்ப பாடத்தை கொடுத்திருந்தாலும் மேலும் அவனது கலையை விருத்தி செய்ய பல பெரும் கலைஞர்கள் வீட்டுக்கு அனுப்பி குருகுலவாசம் செய்ய வைத்தார், இராஜகோபால பாகவதரிடம் புது தியாகராஜ கீர்த்தனைகள் மற்றும் பல கீர்த்தனைகள் கற்றுக் கொள்ள அனுப்பியிருந்தார். சுவாமிநாதனும் பாகவதருக்கு பிடித்தமான சீடனாக இருந்தான்.

''டேய் சுவாமிநாதா ... ... ... ஏண்டா தாமதம்'' என்று அப்பொழுது தான் வந்த சுவாமிநாதனிடம் கேட்டார் பாகவதர்.

'மன்னிக்கணும் அய்யா.. . ... இப்பொழுதுதான்இறக்கினர்கள்'' என்று தன்னுடன் கொண்டு வந்த சிறு சொம்பினை பயபக்தியுடன் பாகவதர் அருகில் வைத்தான் சுவாமிநாதன்.

அதனைக் கண்டதும் பாகவதர் முகம் மலர்ந்தது. ஆம் அதில் அப்பொழுது தான் இறக்கிய கள் இருந்தது. (தொடரும்)

# இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி

## 51-வது ஆண்டு தென்னிந்திய இசைமாநாடும் இசை விழாவும் 1983-84

இடம்:- சுவாமி சங்கரதாஸ் கலையரங்கம், தி. நகர், சென்னை-17

நிகழ்ச்சிக் குறிப்புக்கள்

மாநாட்டுத் தலைவர் : டாக்டர் மதுரைஎஸ். சோமசுந்தரம்.

**19—12—83**

| | | |
|---|---|---|
| மாலை | 4-30 | P. A. முத்தையா குழுவினர்—கிளாரினட். |
| | 6-30 | துவக்கம் : தமிழ்நாடு சட்ட மன்ற தலைவர் மாண்புமிகு K. ராஜாராம். |
| | 7-00 | திருமதி. K. ஜெயலட்சுமி, பரதநாட்டியம் திருமதி. இந்திரா ராஜன் மாணவி) |
| இரவு | 9-30 | திருவையாறு K. கோபாலகிருஷ்ணன் குழுவினர். |

**20—12—83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | குமாரி S. பத்மாவதி குழுவினர் |
| மாலை | 3-45 | திருமதி. ரேவதி ரத்னசாமி குழுவினர். |
| | 6-00 | திருமதி. சித்ரா விஸ்வநாதன் பரதநாட்டியம். |
| இரவு | 9-00 | குமாரி கலா நரசிம்மன் பரதநாட்டியம். |

**21—12—83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | C. V. ஜெயஸ்ரீ வீணை |
| மாலை | 3-45 | H. S. நடராஜ சாஸ்திரி குழுவினர் |
| | 6-00 | டாக்டர் S. ராமநாதன் குழுவினர் |
| இரவு | 9-00 | திருமதி ரத்னகுமார் பரதநாட்டியம் |

**22—12—83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | முகமது சேக் பாபு குழுவினர் |
| மாலை | 3-45 | S. கோபால ரத்னம் குழுவினர் |
| | 6-00 | திருமதி ராதா ஜெயலட்சுமி குழுவினர் |
| இரவு | 9-00 | திருமதி ராஜேஸ்வரி பத்மநாபன், குமாரி வித்யா பத்மநாபன்—இரு வீணை |

**23—12—83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | வில்லியநல்லூர் V. ராமநாதன் குழுவினர் |
| மாலை | 3-45 | திருமதி கமலா விஸ்வநாதன் குழுவினர் வீணை |
| | 6-00 | திருச்சூர் V. ராமச்சந்திரன் குழுவினர் |
| இரவு | 9-00 | திருமதி பிரேமா ஹரிகரன் குழுவினர் |

**24 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | குமாரி S. லட்சுமி குழுவினர் |
| மாலை | 3-45 | திருமதி ரீட்டா ராஜன் குழுவினர் |
| | 6-00 | குமாரி பத்மா சுப்ரமண்யம் பரதநாட்டியம் |
| இரவு | 9-00 | டாக்டர் பிரபஞ்சம் சீதாராம் புல்லாங்குழல் |

**25 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | குமாரி நூர்ஜகான் குழுவினர் கிளாரினட் |
| மாலை | 3-45 | R. குமரேசன், R. கணேசன் வயலின் |
| | 6-00 | K. J. ஜேசுதாஸ் குழுவினர் |
| இரவு | 9-00 | குமாரி N. பார்வதி பரதநாட்டியம் |

**26 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | திருமதி பெத்தா சூரியகுமாரி குழுவினர் |
| மாலை | 3-45 | K. R. சாரநாதன் குழுவினர் |
| | 6-00 | டாக்டர் மதுரை S சோமசுந்தரம் குழுவினர் |
| இரவு | 9-00 | திருமதி நாகமணி ஸ்ரீநாத் குழுவினர் |

**27 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | M. V. கைலாசம் குழுவினர் |
| மாலை | 3-45 | திருமதி நளினி ராமபிரசாத் குழுவினர் |
| | 6-00 | பாலக்காடு K. V. நாராயணசாமி குழுவினர் |
| இரவு | 9-00 | மாஸ்டர் U. ஸ்ரீனிவாஸ் குழுவினர் மேண்டலின் |

**28 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | ஹைதராபாத் ராகரஞ்சனி குழுவினரின் பக்திப் பாடல்கல் |
| மாலை | 3-45 | திருமதி பத்மா குழுவினர் |
| | 6-00 | டாக்டர் N. ரமணி புல்லாங் குழல் |
| இரவு | 9-00 | தாடபள்ளி லோகநாத சர்மா குழுவினர் |

**29 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | திருமதி லட்சுமி சுபர்ணு குழுவினா |
| மாலை | 3-45 | திருமதி ரங்கமணி விஜயராகவன் குழுவினர் |
| | 6-00 | D. K. ஜெயராமன் குழுவினர் |
| இரவு | 9-00 | குமாரி ஸ்ரீநிதி ரங்கராஜன் பரதநாட்டியம் (சுவாமி மலை S. K. ராஜரத்னம் மாணவி) |

**30 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | திருமதி சுபஸ்ரீ மணி குழுவினர் |
| மாலை | 3-45 | திருமதி சௌம்யா மதனகோபால் இந்துஸ்தானி இசை |
| | 6-00 | மகாராஜபுரம் V. சந்தானம் குழுவினர் |
| இரவு | 9-00 | மதுரை G. S. மணி குழுவினர். |

**31 - 12 - 83**

| | | |
|---|---|---|
| பகல் | 2-00 | திருமதி நாகலட்சுமி லட்சுமணன் குழுவினர் |
| மாலை | 3-45 | குமாரிகள் சுகன்யா சாரதா குழுவினர் |
| | 6-00 | கிரு. S பாலச்சந்தர் வீணை |
| இரவு | 9-00 | K. குமாரி சரளா குமாரி குச்சுப்புடி நடனம் |

**1 - 1 - 84**

| | | |
|---|---|---|
| மாலை | 6-00 | ''மாவீரன் கம்சன்''—R. S. மனோகர் நாடகம். |

# மியூசிக் அகடமி

சென்னை

## 57-வது ஆண்டு மாநாடும்

கலை நிகழ்ச்சிகளும்

இடம் : டி. டி. கிருஷ்ணமாச்சாரி அரங்கம்,

டி. டி. கே. சாலை, இராயப்பேட்டை.

18—12—83

| | | |
|---|---|---|
| மாலை | 4-00 | துவக்கம்<br>இந்தியக்கலை கல்வி அமைச்சர்<br>திருமதி. ஷீலா கௌல்<br>தலைமை டாக்டர் S. பினுகபாணி. கர்நூல் |
| மாலை | 5-00 | சுஜாதா ராஜன் பரத நாட்டியம். |
| இரவு | 8-00 | நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதசுரம்<br>T. K. கலியமூர்த்தி தனித்தவில் |

19—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சீதா ராஜசேகர் குழுவினர் |
| | 2-30 | C. K. ராமசந்திரன் குழுவினர் |
| மாலை | 5 00 | நெய்யாட்டின்கரை வாசுதேவன் குழுவினர் |
| இரவு | 8-00 | நேதநூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர் |

20—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | O. S. தியாகராஜன் குழுவினர் |
| | 2-30 | சுதா ரகுநாதன் குழுவினர் |
| மாலை | 5-00 | Dr. S. ராமநாதன் குழுவினர் |
| இரவு | 8-00 | V. ராமச்சந்திரன் குழுவினர் |

21—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | புதுக்கோட்டை R. கிருஷ்ணமூர்த்தி வீணை |
| | 2-30 | வேகவாகினி விஜயராகவன் குழுவினர் |
| மாலை | 5-00 | T.M. தியாகராஜன், P.S. நாராயணசாமி குழுவினர் |
| இரவு | 8-00 | N. ரமணி புல்லாங்குழல் |

22—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | யோகம் சந்தானம் குழுவினர் |
| | 2-30 | மாஸ்டர் U. சீனிவாஸ் மேண்டலின் |
| மாலை | 5-00 | ராஜம் ஐயர் குழுவினர் |
| இரவு | 8-00 | புதுக்கோடு கிருஷ்ணமூர்த்தி குழுவினர் |

23—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | R. சுந்தர் குழுவினர் |
| | 2-30 | V. விஜயலட்சுமி குழுவினர் |
| மாலை | 5-00 | M. D. ராமநாதன் குழுவினர் |
| இரவு | 8-00 | M. S. கோபாலகிருஷ்ணன்.<br>நர்மதா கோபாலகிருஷ்ணன் வயலின் |

24—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுகுந்தா காளமேகம் குழுவினர் |
| | 2-30 | சாருமதி ராமச்சந்திரன் குழுவினர் |
| மாலை | 5:00 | மகாராஜபுரம் சந்தானம் குழுவினர் |
| இரவு | 8-00 | மணி கிருஷ்ணசாமி குழுவினர் |

25—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | மீனா சுப்ரமண்யம் குழுவினர் |
| | 2-30 | மகாராஜபுரம் ராமச்சந்திரன் குழுவினர் |
| மாலை | 5-00 | D. K. பட்டம்மாள் குழுவினர் |
| இரவு | 8-00 | T. N. கிருஷ்ணன், விஜி நாராயணன்,<br>ஸ்ரீராம கிருஷ்ணன் குழுவினர் வயலின் |

26—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | மாலதி ஜனார்தனம் குழுவினர் |
| | 2-30 | ரவிகிரன் கோட்டு வாத்தியம் |
| மாலை | 5-00 | R. வேதவல்லி குழுவினர் |
| இரவு | 8-00 | T. V. சங்கர நாராயணன் குழுவினர் |

27—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | மங்களம் சங்கர் குழுவினர் |
| | 2-30 | V. L. ஜானகிராமன வீணை |
| மாலை | 5-00 | Dr. மதுரை S. சோமசுந்தரம் குழுவினர் |
| இரவு | 8-00 | மைசூர் துரைசாமி ஐயங்கார் வீணை |

28—12—83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | K. R. சாரநாதன் குழுவினர் |
| | 2-30 | பத்மா நாராயணசாமி குழுவினர் |
| மாலை | 5-00 | வோலடி வெங்கடேஸ்வரலு குழுவினர் |
| இரவு | 8-00 | Dr. M. L. வசந்த குமாரி குழுவினர் |

29 - 12 - 83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | பார்வதி பரசுராம் குழுவினர் |
| | 2-30 | கீதா ராஜா குழுவினர் |
| மாலை | 5-00 | S. பாலச்சந்தர், காயத்ரி நாராயணன் வீணை |
| இரவு | 8-00 | T. N. சேஷ கோபாலன் குழுவினர் |

30 - 12 - 83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | T. V. சுந்தரவல்லி குழுவினர் |
| | 2-30 | P. சூர்யராவ குழுவினர் |
| மாலை | 5-00 | வைரமங்கலம் லட்சுமி நாராயணன் குழுவினர் |
| இரவு | 8-00 | D. K. ஜெயராமன் குழுவினர் |

31 - 12 - 83

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | உமா சீதா சகோதரிகள் குழுவினர் |
| | 2-30 | R. தியாகராஜன் புல்லாங்குழல் |
| மாலை | 5-00 | நிர்மலா ராமச்சந்திரன் பரதநாட்டியம் |
| இரவு | 8-00 | பீம்சென் ஜோஷி இந்துஸ்தானி இசை |

1 - 1 - 84

| | | |
|---|---|---|
| பகல் | 1-00 | சுகுணா புருஷோத்தமன் குழுவினர் |
| மாலை | 4-00 | சதஸ் ; டாக்டர் V. K. நாராயண மேனன்,<br>தலைவர், சங்கீத நாடக அகடமி, புதுடெல்லி |
| | 5-00 | K. V. நாராயணசாமி குழுவினர் |
| இரவு | 8-00 | அலர்மேல்வள்ளி பரதநாட்டியம் |

2 - 1 - 84

| | | |
|---|---|---|
| மாலை | 5-00 | கனகா பரத நாட்டியம் |
| இரவு | 8-00 | சுவப்ன சுந்தரி குச்சுப்புடி நடனம் |

3 - 1 - 84

| | | |
|---|---|---|
| மாலை | 6-00 | ஆனந்தவல்லி சச்சிதானந்தா பரத நாட்டியம் |

---

# கந்தனருட்சங்கம்

## இரண்டாவது ஆண்டு விழா

### திருத்தணியில் இசை அரங்கம்

சென்னை அமைந்த கரையில் முருகன் அருட்செல்வர் T. S. மோகனரங்கம் அவர்கள் தலைமையில் இயங்கி வரும் கந்தன் அருட்சங்க இரண்டாவது ஆண்டு நிறைவு விழா திருத்தணிகை படிவிழா 31-12-83 அன்று மலைப்படி வழியிலுள்ள ஆலடி சுப்பராய செட்டி சத்திரத்தில் நடைபெற உள்ளது. அன்று மதியம் அன்னதானமும் மாலை 6 மணி முதல் மறுநாள் 1-1-84 காலை வரை தொடர் இசையரங்கும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இசையரங்கத்தில் காஞ்சிபுரம் ஆ. விநயக முதலியார், பவானி அம்மையார், சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம், B.J. மாதவன், B. N. நாகராசன், A. ராகவன், V. S. பாலசுப்ரமணியம், C. N. சம்பந்தம் திருமுருகவிசாகநம்பி, பத்மாவதி மற்றும் பலர் திருப்புகழிசை வழங்குவர். இச்சங்கம் திருப்போரூரில் சித்திரைக் கிருத்திகை இசை விழாவினையும் ஆண்டு தோறும் சிறப்பாக நடத்தி தமிழிசைத் தொண்டு செய்து வருகின்றது

இயலிசை



# ஸ்ரீ கிருஷ்ண கான சபா

கிரிபித் சாலை தி. நகர், சென்னை-17

## 28-வது ஆண்டு கலை விழா

**17-12-83**

மாலை 5-00 — திரு. P. V. கிருஷ்ணமூர்த்தி, துணைத்தலைவர் சங்கீத நாடக அகடமி, புது டெல்லி, அவர்கள் துவக்கி "நிருத்ய சூடாமணி" என்ற விருதினை V. P. தனஞ்ஜெயன் அவர்களுக்கு வழங்குவார்.

வாழ்த்துரை:- டாக்டர் பத்மா சுப்ரமண்யம்

பேராசிரியர்:- நிருத்யசூடாமணி சி. வி. சந்திரசேகர்.

மாலை 6-00 — ரம்யா சீனிவாசன் பரதநாட்டியம் (சுவாமிமலை S. K. ராஜரத்னம் மாணவி)

இரவு 8-00 — நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் நாதசுரம் வலையப்பட்டி சுப்ரமண்யம் தவில்.

**18-12-83**

மாலை 5-00 — T. M. தியாகராஜன், P. S. நாராயணசாமி குழுவினர்

இரவு 8-00 — தனஞ்ஜெயன் குழுவினர் பரதநாட்டியம்.

**19-12-83**

மாலை 5-00 — M. S. கோபாலகிருஷ்ணன், M. G. நர்மதா இருவயலின்.

இரவு 8-00 — சுதாராணி ரகுபதி பரதநாட்டியம்

**20-12-83**

மாலை 5-00 — மணி கிருஷ்ணசாமி குழுவினர்

இரவு 8-00 — C. V. சந்திரசேகர், ஜெயசந்திரசேகர், சித்ரா, மஞ்சரி பரதநாட்டியம்

**21-12-83**

மாலை 5-00 — நேத்தநூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினர்

இரவு 8-00 — மாளவிகா சாருகை பரதநாட்டியம்

**22-12-83**

மாலை 5-00 — D. K. ஜெயராமன் குழுவினர்

இரவு 8-00 — லட்சுமி விஸ்வநாதன் பரதநாட்டியம்

**23-12-83**

மாலை 5-00 — N. ரமணி, R. தியாகராஜன் இருபுல்லாங்குழல்

இரவு 8-00 — ஜெயலட்சுமி பரதநாட்டியம்

**24-12-83**

மாலை 5-00 — லால்குடி ஜெயராமன் வயலின்

இரவு 8-00 — பிம்சென் ஜோஷி இந்துஸ்தானி இசை

**25-12-83**

மாலை 5-00 — T. N. சேஷகோபாலன் குழுவினர்

இரவு 8-00 — துர்கா லால் கதக் நடனம்

**26-12-83**

மாலை 5-00 — மாஸ்டர் U. சீனிவாஸ் மேண்டலின்

இரவு 8-00 — ஷோபா நாயுடு குச்சுப்புடி நடனம்

**27-12-83**

மாலை 5-00 — மகாராஜபுரம் சந்தானம் குழுவினர்

இரவு 8-00 — அலர்மேல்வள்ளி பரதநாட்டியம்

**28-12-83**

மாலை 5-00 — B. N. சுரேஷ் புல்லாங்குழல்

இரவு 8-00 — சித்ரா விஸ்வேஸ்வரன் பரதநாட்டியம்

**29-12-83**

மாலை 5-00 — நெய்யாட்டின்கரை வாசுதேவன் குழுவினர்

இரவு 8-00 — சுவப்னசுந்தரி குச்சுப்புடி நடனம்

**30-12-83**

மாலை 5-00 — வோலேடி வெங்கடேஷ்வரலு குழுவினர்

இரவு 8-00 — சம்பராமாயணம், பொம்மலாட்டம்.

**31-12-83**

மாலை 5-00 — K. V. நாராயணசாமி குழுவினர்

இரவு 8-00 — பர்வீண் சுல்தானு இந்துஸ்தானி இசை

**1-1-84**

காலை 8-30 — மைசூர் துரைசாமி அய்யங்கார் வீணை

மாலை 4-00 — சுகுண புருசோத்தமன் குழுவினர்

6-00 — டாக்டர் பத்மா சுப்ரமண்யம் பரதநாட்டியம்

இரவு 9-00 — வேகவாகினி விஜயராகவன் குழுவினர்

**2-1-84**

மாலை 6-30 — ஸ்ரீநிதி ரங்கராஜன் பரதநாட்டியம்

**3-1-84**

மாலை 6-30 — சாந்தினி கோபால் பரதநாட்டியம்

**4-1-84**

மாலை 6-30 — மீனாட்சி சித்தரஞ்ஜன் பரதநாட்டியம்

**5-1-84**

மாலை 6-30 — BVS பத்மா பரநாட்டியம்



## திருவையாறு தியாகராஜர் ஆராதனை சபை

### புது நிர்வாகிகள் தேர்வு

கர்நாடக இசைக்கு தெலுங்கில் ஏராளமான கீர்த்தனைகள் இயற்றி பாடிதந்த சத்குரு தியாகராஜர் வாழ்ந்த திருவையாற்றில் வருடா வருடம் அவர் முக்தியடைந்த தை பகுள பஞ்சமியில் பெரும் இசை விழாவினை நடத்தி வருகின்றனர். தியாகப்ரம்ம ஆராதனை சபையார் சமீபத்தில் இங்கு தேர்தல் நடைபெற்று அடுத்து வரும் 3 ஆண்டுகளுக்கு புது நிர்வாகிகளை கீழ்கண்டவாறு தேர்ந்தெடுத்துள்ளனர்.

தலைவர் : G. கருப்பையா மூப்பனுர்

துணைத்தலைவர்: டாக்டர் மதுரை S. சோமசுந்தரம்

செயலர்கள் : குன்னக்குடி வைத்தியனுதன்.
அரித்துவாரமங்கலம் A. K. பழனிவேல்

பொருளாளர் : குடந்தை R, கோபாலன், வழக்கறிஞர்

துணை செயலாளர்கள் : திருக்கருகாவூர் T.G. சுப்ரமணியம், நாதசுரம்
திருச்சி K. S. நாராயணன், புல்லாங்குழல்
பருத்திகுடி S. சம்பந்தம், மிராசு
திருவையாறு R. பஞ்சநதம்

இவ்வாண்டு ஜனவரி 19 முதல் விழாவினைச் சிறப்பாக நடத்த இவர்கள் ஏற்பாடு செய்துவருகின்றனர். 22-1-84 அன்று தியாகராஜர் படவூர்வலம் கலைஞர்கள் சூழ நடைபெறும்.

### தமிழிசை மன்ற இசை விழா

திருவையாற்றில் தமிழிசை மன்ற 13வது ஆண்டு விழாவினை 84ல் ஜனவரி 14, 15, 16 தேதிகளில் அரசினர் கல்லூரி திடலில் நடத்த உள்ளனர். பிரபல நாதசுர தவில் கலைஞர்கள். பாடகர்கள் கலந்து சிறப்பிக்க உள்ளனர் விழாவில் சிறந்த நாதசுர. தவில், இசைகலைஞர் ஆகிய மூவருக்கும் பட்டங்களை வழங்கி பொன்னாடை போர்த்துவர். விழா ஏற்பாடுகளை பொதுச் செயலர் பெரமூர் ப. சீனிவாசன். பொருளாளர் கி. குமாரசாமி, இரா. பஞ்சநதம், தங்க. கலியமூர்த்தி மற்றும் பலர் செய்து வருகின்றனர்.

(தகவல் : G. T, சுப்ரமணியம்)





## மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்

16, ஆலிவர் சாலை, சென்னை - 4.

### 32 - வது ஆண்டு கலை விழா

**19 - 12 - 83**

மாலை 6-00 'சிலம்புச்செல்வர்' டாக்டர் ம. பொ. சிவஞானம் (தமிழக சட்டமன்ற மேலவைத் தலைவர்) துவக்கி வைத்து டாக்டர் S. ராமனுதன் அவர்களுக்கு 'சங்கீத கலா நிபுண' என்ற விருதினை வழங்குவார்.
நடனம் : குமாரி பிரியதர்சினி
(S. K, ராசரத்தினம் மாணவி)

**20 - 12 - 83**

B. ராஜம் அய்யர் குழுவினர்

**21 - 12 - 83**

R. பிச்சுமணி குழுவினர் வீணை

**22 - 12 - 83**

M. பாலமுரளிகிருஷ்ணு குழுவினர்

**23 - 12 - 83**

ராதா & ஜெயலட்சுமி குழுவினர்

**24 - 12 - 83**

மாலை 4-00 குமாரிகள் உமா, சீதா குழுவினர்
6-00 மாஸ்டர் U. சீனுவாஸ் மாண்டலின்

**25 - 12 - 83**

காலை 9-00 N. ரமணி & R. தியாகராஜன் இரு புல்லாங்குழல்
மாலை 4 00 சௌபாக்யா குழுவினர்
6-00 டாக்டர் S. இராமநாதன் குழுவினர்

**26 - 12 - 83**

மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர்

**27—12—83**

T. V. சங்கரநாராயணன்

**28—12—83**

Prof T. N. கிருஷ்ணன், விஜி நாராயணன், ஸ்ரீராம்—மூன்று வயலின்கள்

**29—12—83**

K. V. நாராயணசாமி குழுவினர்

**30 - 12 - 83**

டாக்டர் பத்மா சுப்ரமணியம் நடனம்

**31—12—83**

மாலை 4-00 K. R. சாரநாதன் குழுவினர்
„ 6-00 டாக்டர் M. L. வஸந்தகுமாரி குழுவினர்

**1 - 1 - 84**

காலை 9-00 லால்குடி G. ஜெயராமன் G J.R. கிருஷ்ணன் இரு வயலின்
மாலை 4-00 ரஜனி சுவாமிநாதன் குழுவினர்
.. 6-00 மகாராஜபுரம் சந்தானம் குழுவினர்




டா. இராமநாதன்,
18, ... பிரதான சாலை
ராஜா அண்ணாமலைபுரம்
சென்னை-28

WN/MS(S) / 260
' IYALLISAI ' Musical Bi - Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani Madras - 26. Published & Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, MADRAS 600 024.

# பெரியவர் (பினாகி) பாணி

வேறு துறையில் தொழில் செய்து கொண்டு இசையில் மேதை தையாக இருக்க முடியும் என நிரு பித்தவர் டாக்டர் S. பினாகபாணி M D. ஆம் இவர் ஒரு மருத்துவர் தான். ஆந்திர மாநிலம் ஸ்ரீ காகு ளம் மாவட்டம் பிரியகிரகம் என்ற சிறுகிராமத்தில் காமேஸ்வரராவ் ஜோகம்மா இவர்களுக்கு 1913-ல் மகனாக பிறந்தார். கல்வியுடன் இசைக்கலையும் கற்று வந்தார் ஆரம்பத்தில் B.S. லட்சுமணராவ் அவர்களிடமும், பின்னர் துவாரம் வெங்கடசாமி நாயுடு, R. ரங்கரா மானுஜ அய்யங்கார் இவர்களிடம் இசைபயின்று 1939-ல் அரங்கேறி னார். அன்று முதல் வானொலியில் பாடி வருகிறார். ஆந்திராமாநிலம் முழுவதும் பாடி புகழ்பெறவே பெங் களூர், சென்னை, கோவைபோன்ற இதர மாநில நகரங்களிலும் பாட வாய்ப்புகள் பெற்றார்.

1970-ல் சென்னை பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் 'சங்கீத கலா சிகாமணி' விருது பெற்றார். 1974 முதல் திருப்பதி ஆலய கலை ஞராக இருந்து 1976ல் அங்கு சங் -கீத வித்வான் மணி' பட்டமும் பெற்றார். 1977ல் டெல்லி சங்கீத நாடக அகடமி விருது மற்றும்



ஆந்திரமாநில விருதுகள் பெற்றார். இவ்வாண்டு சென்னை மியுசிக் அக டமி சங்கீத கலாநிதியும் இவரே.

திருப்பதி ஆலய ஆதார அன்னமாச்சாரியா என்ற தெலு ஙுக் கவிஞர் பாடல்களுக்கு இசை யமைத்து புத்தகமாக வெளியிட் டுள்ளார்கள். கர்நாடக இசை ஆராய்ச்சியாளர். ஆந்திரத்தில் அதனை வளர்த்தவர் ஏராளசிஷ்டர் களை உருவாக்கியுள்ளார். அதில் நேதநூரி கிருஷ்ணமூர்த்தி, வோ லெடி வெங்கடேசுவரலு குறிப்பிட தக்கவர்கள்.



## தமிழ் இசைச் சங்கம்

( 2-ம் பக்க தொடர்ச்சி )

**29—12—83**

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | செல்வி V. சண்முகசெல்வி-பரதநாட்டியம் |
| மாலை | 4-00 | பொன் லம்போதர பாகவதர்-குழுவினர் |
| ,, | 6-00 | டாக்டர் மதுரை S. சோமசுந்தரம் |
| இரவு | 9-30 | குமாரி அலக்ய நரசிம்ராவ்-பரதநாட்டியம் |

**30—12—83**

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | வாரியார்தாசன்-பட்டினத்தார் இசைச் சொற்பொழிவு |
| மாலை | 4-00 | திருமதி பாபநாசம் ருக்மணி ரமணி குழுவினர் |
| .. | 6-00 | 'மாவீரன் கம்சன்' நாடகம்-R. S. மனோகர் |
| இரவு | 9-30 | செல்வி மீனுசுப்பையா-பரதநாட்டியம் (தனம் கிருஷ்ணமூர்த்தி நட்டுவாங்கம்) |

**31—12—83**

| | | |
|---|---|---|
| காலை | 10-00 | திருமதி அனுராதா ஜெகன்னாதன்-பரதநாட்டியம் (சுவாமிமலை K. ராசரத்னம் நட்டுவாங்கம்) |
| மாலை | 4-00 | ராதிகா கணேசன்-பரதநாட்டியம் (சித்ரா விசுவேசுவரன்-மாணவி) |
| [illegible] | 6-00 | சித்ரா விசுவேசுவரன்-பரதநாட்டியம் |
| இரவு | 9-30 | D. K. ஜெயராமன் குழுவினர் |

**1 - 1 - 84**

| | | |
|---|---|---|
| [illegible] | [illegible] | கிரிதாரிபிரசாத் சொற்பொழிவு |
| [illegible] | [illegible]-30 | செல்வி ஜெயந்தி ராமானுஜம் பரதநாட்டியம் |
| | 4-30 | திருமதி சுதா ரகுநாதன் குழுவினர் |
| | 6-00 | திருமதி வைஜயந்திமாலா பாலி பரதநாட்டியம் |
| இரவு | 9-30 | நாமகிரிப்பேட்டை K. கிருஷ்ணன் நாதசுரம் அரித்துவாரமங்கலம் A. K. பழனிவேல் திருவாளபுத்தூர் T A. கலியமூர்த்தி தவில்கள் |

## 'இசைப்பேரறிஞர்' டாக்டர் S. இராமநாதன்

இசைக்கலை பற்றி ஆராய்ச்சி செய்து விளக்கம் தரக்கூடியவர் கள் கச்சேரி செய்யக்கூடியவர்-களாக இருப்பதும்; கச்சேரியில் விற்பன்னர்களாக இருப்பவர்கள் நல்ல இசை ஆராய்ச்சியாளர் களாக இருப்பதும் மிகவும் அரிது. சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலை கழகம் உருவாக்கிய சங்கீதபூஷ-ணம் இராமநாதன் அவர்கள் கடந்த 45 ஆண்டுகளாக இசையா சிரியராக ஆராய்ச்சியாளராக. கச் சேரி கலைஞராக பணியாற்றி இசை உலகில் இன்று ஓர் பெரியவராக விளங்குகின்றார்.

தென்னாற்காடு மாவட்ட வள வனூரில் 1917ல் பிறந்த இவர் திருக்கோவிலூரில் கல்வி பயின்றார் இசைப்பயிற்சி துவக்க குரு நாதர்கள் இராமுடி பாகவதர் மணலூர்ப்பேட்டை சுப்பிரமணிய தீட்சதர் சிதம்பரத்தில் தஞ்சை பொன்னையாபிள்ளை, திருவையாறு சபேச அய்யர், டைகர் வரதாச்சாரி யார் இவர்களிடம் பயிலும் வாய்ப் பினைப்பெற்றார், பின்னர் புதுக்-கோட்டையில் இசையாசிரியர், சென்னை இசைக்கல்லூரியில் பேரா சிரியர், மதுரை சத்குரு சங்கீதக் கல்லூரியில் முதல்வர் என பணி யாற்றினார். தென்னாட்டு கோயில் களில் இசைகூத்து பற்றி ஆராய்ச்சி யாளராகவும் 3 வருடங்கள் இருந் தார்,

மும்முறை அமெரிக்கா சென்று 5 ஆண்டுகாலங்கள் அங்கு பல பல் கலைக்கழகங்களில் இசைப் பேராசி ரியராக பணியாற்றியவர். அங்கு இவரது 'சிலப்பதிகாரத்தில் இசை' என்றஆய்வுக்கட்டுரைக்காக வெஸ் லியன் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் தந்து சிறப்பித்தது. தமிழ கத்தில் நடைபெறும் இசைமாநா டுகள் அனைத்திலும் இவர் கலந்-துள்ளார். உலகத்தமிழ் மாநாடு கோலாலம்பூர். எத்னோ மியூசிகாலஜி மாநாடு டிட்ராய்டு, ஆசிய இசை மாநாடு, டைவான்சைனு, சர்வ தேச இசை மாநாடு - போபால் இவற்றிலும் கலந்து உரைகள் ஆற்றியுள்ளார்.

ஏராள இசைநூல்கள் எழுதி யுள்ளார். தேவாரம், காவடிசிந்து பிரபந்தம், நந்தனார் சரித்திரபாடல் கள் இவரது சுரதாள குறிப்புடன் வெளிவந்துள்ளன. சிலப்பதிகார இசை நுணுக்கவிளக்கம், தியாகரா ஜர், சியாமாசாஸ்திரிகள் அரியகீதங் கள் புத்தகங்கள் இவர்க்கு புகழை பெற்று தந்தன,



தேவக்கோட்டை நாராயண அய்யங்காரிடம் பயிற்சி பெற்று வீணைக்கச்சேரியும், வானாடி கிருஷ் ணஅய்யரிடம் பயிற்சி பெற்று வாய்ப்பாட்டு கச்சேரியும் செய்ய ஆரம்பித்தார். தமிழக அரசின் 'கலைமாமணி' காரைக்குடியில் 'இசைக்கடல்' மதுரையில் 'மதுர கலாப்ரவீண' விருதுகளைப் பெற் றுள்ளார். இவரது தமிழிசை ஆராய்ச்சிக்காகசென்னை தமிழிசைச் சங்கம் 'இசைப்பேரறிஞர்' பட்டத் தை வழங்கியது. இவ்வாண்டு மயிலை பைன்ஆர்ட்ஸ்கிளப் 'சங்கீத கலா நிபுண'ராக இவரைத் தேர்ந் தெடுத்துள்ளது.